Regd. No. M. 3978. [விலை காலணா.

# “ அம்ருதலஹரீ ”

## கோயில் அநுபந்தம்

“ AMRUTALAHARI ”—TEMPLE SUPPLEMENT.

நெ. 22] ஸ்ரீரங்கம், 16—6—1940. [ஞாயிறு
விக்ரம-ஸு ஆனி-மீ 3-வ

### உத்ஸவப் பத்திரிகை

ஸ்ரீரங்கம் கோயில் நோடிபிகேஷன் ஆனதும் முதல் ஆபீஸராய் விளங்கிய, இப்பொழுது பழைய ஆபீஸராய் திகழா நிற்கின்ற ஸ்ரீ. ராஜகோபால நாயுடுவின் சீர்திருத்தத்தில் முக்கியமானது உத்ஸவப் பத்திரிகை. இவருடைய ஆளுகையில் ஸ்ரீரங்கம் கோயில் அகப்பட்டுக் கொண்ட இரண்டு வருஷ காலத்திலும் ஒவ்வொரு உத்ஸவத்திற்கும் ராஜகோபால நாயுடுவின் பெயர் தவறுமல் அச்சிட்டு அவருக்கு வேண்டியவர்களான எல்லா ஜீவராசிகளுக்கும் ஸைக்கிள் ப்யூன் மூலம் சேர்ப்பிக்கப்பட்டதாம். இப்படி கியாதி பெற்ற உத்ஸவப் பத்திரிகை நாளது ஜ்யேஷ்டாபிஷேகத்திற்கு புது ஆபீஸர் கனம் பொருந்திய மாதவன் பிள்ளை அவர்களால் நிறுத்தப்பட்டது போலிருக்கிறது. சென்ற வருஷத்தில் போல் ஜ்யேஷ்டாபிஷேகத்திற்குப் பத்திரிகையோ அல்லது பிரார்த்தனையோ ஏதோ ஒன்று பிரம்மாண்டமாக எக்காரணம் பற்றியோ இவ்வருஷம் இதுகாறும் வெளியாகவில்லை. பத்திரிகை அச்சிடுவது வீண் செலவு; அதற்கு மேல் அதைத் திருச்சியிலும் ஸ்ரீரங்கத்திலும் வேண்டியவர்களுக்குக் கொடுத்து வருவதற்காக பியூன்களுக்கு வீண் அலைச்சல்—என்ற சிக்கன முறைக் கொள்கையாலும், கருணையினாலும் ஸ்ரீ. மாதவன் பிள்ளை நிறுத்தி விட்டாரோ, அல்லது பத்திரிகையிலிருந்து ஜனங்கள் தெரிந்து கொள்ளக்கூடியது யாதுமில்லை யென்று தான் நிறுத்தி விட்டாரோ!

## கம்பம் தவறாமல் வாழை!

## கோபுரம் தவறாமல் பூப்பந்தல்!!

ஸ்ரீ. ராஜகோபால நாயுடு ஆரம்பித்த உத்ஸவ கால அட்டவணை விளம்பரப் பத்திரிகை தான் பகட்டு என்று யாரும் நினைக்க வேண்டாம். கோடிபிஷேகன் ஆன வருஷத்தில் ராயகோபுரம் முதல் ஒவ்வொரு கோபுரத்திலும் போட்ட பூப்பந்தலும், ரங்க விலாஸம், கருட மண்டபம், துவஜஸ்தம்பப் பிரதக்ஷிணம், உள் பிரதக்ஷிணம்—முதலியவற்றிலுள்ள கம்பம் தவறாமல் ஒவ்வொன்றிலும் வாழை கட்டப்பட்டிருந்ததும் கோடிபிஷேகன் ஆன அடுத்த வருஷத்திலேயே குறையலாயின. இவ்வருஷம் இவைகளையும் புது ஆபீஸர் நிறுத்திவிடுவார்போல் தெரிகிறது.

## ஆயிரக்குட ஆடம்பரம்

ஜ்யேஷ்டாபிஷேகத்துக்கு ஸ்ரீரங்கத்தில் ஆயிரக்குடத் திருமஞ்சனமென்று பெயர். இப்பொழுது வெகுநாளாய் ஆயிரம் குடங்களில் தீர்த்தம் கொண்டு வருகிறதில்லை. ஆயிரத்திற்குப் பதிலாய் நூறு அல்லது நூற்றெட்டுக் குடங்களில் தான் தீர்த்தம் பிரதி வருஷமும் வந்து கொண்டிருந்தது. தனக்கு ஸ்ரீரங்கம் கோயிலில் காஷியர் வேலை கொடுத்த தர்மகர்த்தாக்களும் ஸ்ரீ. கொண்டப்பாவின் பேனா முனையிலகப்பட்டு ஸஸ்பெண்டு செய்யப்பட்டு கோயிலும் கோடிபை செய்யப்பட்டு, தானும் எக்ஸிக்யூடிவ் ஆபீஸராக நியமிக்கப்பட்டு இஷ்டசித்திக்காக பெருமாளுக்கு ஆயிரம் குடங்களில் தீர்த்த மெடுத்துத் திருமஞ்சனம் செய்து வைப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டவர் போல ஸ்ரீ. ராஜகோபால நாயுடு ஏறக்குறைய ஆயிரம் குடங்களிலேயே தீர்த்தம் கொண்டு வரச் செய்தார். அவ்வளவு தான். ஆயிரம் குடம் தீர்த்தம் பெருமாள் மீது சேர்க்கப்பட்டதா வென்பது நாயுடுவுக்குத் தெரியாது. மேலும் கோடிபிஷேகன் ஆன மறு வருஷத்தில் ஆயிரம் குடத்திற்கு ஆள் அகப்படாமல் ஸ்ரீரங்கம் உயர்தர கல்லூரியிலிருந்து குடுமியைப் பறிகொடுத்த பல சிறுவர்கள் தலையில் குடத்தை வைத்துக் கொண்டு வரச்செய்து, அவர்களுக்காக ஏதோ செலவு செய்து டிபன் சப்ளை கூட செய்துவைத்தார். இவ்வருஷம் இந்த ஆடம்பரமும் அதிக்ரமமும் இல்லாமற் நூற்றெட்டுக் குடத்தில் மட்டும் தீர்த்தம் ஒழுங்குடன் வந்தால் போதுமென்று புது ஆபீஸருக்குத் தெரிவிக்கிறோம்.



## இப்படியும் ஆயிற்றே!

லாட்டரிப்பணத்தைக்கொண்டு வாங்கின நிலத்திலிருந்தும் மற்றைய பூர்வீக நிலங்களிலிருந்தும் வருகிற நெல் தவிர சுமார் இரண்டாயிரம் கலம் நெல் பிரதிவருஷமும் கிரயத்திற்கு வாங்க வேண்டியதுண்டு. ராஜன்—மந்திரி, கொண்டப்பா—பிரஸிடெண்டு, ராஜகோபாலநாயுடு—ஆபீஸர், இன்னும் இவர்களுக்குகந்த கீழ் சிப்பந்திகள்—முதலிய பரிவாரங்களுடன் அதிகாரம் தூள் பறந்து உள்ளே வைத்திருந்த பணம் முழுவதும் பெரிதும் மராமத்துச் செலவிலேயே வாரி யிறைக்கப்பட்டதால் என்னவாயிற்று?——கலம் மூன்று ரூபாய்க்கு விற்றபோது நெல்வாங்கக் கோயிலில் பணமில்லாமல் இப்பொழுது கலம் நான்கு ரூபாய் விற்கும் சமயத்தில் அதிக விலை கொடுத்து நெல் வாங்கவேண்டியதிருக்கிறதே—இதுதான் கண்டபலன். "திட்டத்தைக் குறைத்தாலும் குறைக்கலாம்; மராமத்தை நிறுத்தக்கூடாது என்பாருமுளர் இன்னமும். ஐயோ! இப்படியும் ஆயிற்றே!

## இவர் கரார்!

புது ஆபீஸர் ஸ்ரீ. மாதவன் பிள்ளையைப்பற்றி எல்லாரும் நினைப்பது போல நாம் நினைப்பதில்லை. எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் வேலைக்கு வேண்டிய அகட விகட சாமர்த்தியம் இவருக்கு போதாதென்று பலர் சொல்லுவார்களானாலும் நாம் அப்படிக் கருதுவதற்கில்லை. ஆபீஸைச் சரியாக நடத்தி எழுத்து மூலமான வியவஹாரங்களைக் கவனிப்பதுதான் ஆபீஸருக்கு அவசியமான வேலை. இந்த வேலைக்கு இவர் சமர்த்தரா—என்றுதான் ஆலோசிக்கவேண்டியது. இந்த வேலையைக்கூட இவர் முன்னும் போகவொட்டாமல் பின்னும் போகவொட்டாமல் செய்வரோ என்று தோன்றுகிறது. வழக்கமாக வந்துகொண்டிருக்கிற காகிதங்களைத்தவிர புது விஷயமாக ஏதாவது காகிதம் கிளம்பிவிட்டால் அதை ஆராய்ந்து ஊன்றிக் கவனித்து தீர்மானம் கொடுப்பதாகத் தெரியவில்லை. பதில் எழுதுவதும் ஒழுங்காக எழுதுவதாகத் தெரியவில்லை. ஆனால் ஒரு குணம் மட்டில் இருப்பதாகத் தெரிகிறது. அதாவது குமாஸ்தாக்களை, அதிலும் சில குறிப்பிட்ட குமாஸ்தாக்களை, இடம் விட்டு அசையாமல் கட்டிப்போட்டு

மணிக்கணக்குப்படிதான் விடுகிறார் என்று தெரிகிறது. புது ஆபீஸர் வேலையில் எப்படியிருந்தாலும் வீண் ஜம்பம், ஆடம்பரம், தண்டச்செலவு முதலிய யாதையும் விரும்பாத பரம ஸாதுதான் எனத் தெரிகிறது. பி. ஏ, பி. எல், ஆக இருந்தும் போர்டில் வெகு நாள் இருந்து அனுபவப்பட்டும் தேவஸ்தான நிர்வாஹத்தினுள்ள ஸகல அம்சங்களையும் கவனித்து நிர்வஹிக்கிறதில்லையே!

---

# ஆகாசத் தபால்

ஆக்டிங் எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்,
ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி தேவஸ்தானம், ஸ்ரீ ரங்கம்.

ஆபீஸர்வாள்! நீர் ஏதோ சில வேலைகளைத் தவிர வேறு எதையும் கவனிப்பதில்லையெனத் தெரிகிறது. ஆனால் உமக்குத் தெரிந்த வேலையைத் தவிர மற்ற வேலைகளை நீர் அடியோடு கவனிப்பதுமில்லை. கொறட்டு மணியம் கிருஷ்ணையங்கார் மூன்றும் வருஷம் குத்தகை பாக்கியான சுமார் ரூ. 1800 இன்னும் செலுத்தாமலே அதிகார ஆடம்பரம் செய்து வருகிறார். நீர் அதிகாரத்திற்கு வந்தபோது கோர்ட்டுகள் மூடப்பட்டிருக்கின்றன. கோர்ட்டுகள் திறக்கப்பட்டவுடன் முறைப்படி கிருஷ்ணையங்கார் பாக்கி விஷயமாக தாவா போடாமலிருக்க வேண்டாமே. தாவா செலவில்லாமலேயே பணத்தை வசூல் செய்து விடலாம் என்று யாரேனும் தைரியமாகச் சொன்னால் அதற்காகவும் ஒரு வாரம் பொறும். ஆனால் கோர்ட்டு திறந்த நாள் முதல் கிருஷ்ணையங்காரை பாக்கியின் காரணமாக மணியத்திலிருந்து அப்புறப்படுத்துவது நலம். மேலும் இதுமாதிரி விஷயங்களில் நீர் 'வழவழ குழகுழ' வென்று இருக்க வேண்டாம்.

உங்கள் பழைய எஜமானருக்கு ஸஸ்பென்ஷன் உத்திரவு தந்தி மூலம் பாவின 29-5-40 இரவு சுமார் 12-மணிக்கு பேஷ்கார், ஆபீஸைத் திறந்து பேப்பர் எடுத்துப் போனதாக ஊர் பூராவும் பாவின விஷயம் உமக்குத் தெரிந்தும், அநுபந்தத்தில் வெளிவந்தும் நீர் அதை இன்னும் விசாரியாமலே தளுக்கு செய்து வருகிறீர். சாயந்திரம் 6-மணிக்கு ஆபீஸைப் பூட்டி சாவியைக் கொண்டு போய் விடுகிறீராம். இரவு காவலுக்கென ஏற்பட்ட



குமாஸ்தா சம்பளத்தையும் நிறுத்தி விட்டீராம். இதெல்லாம் ரொம்ப சரியே. பர்ஸனல் க்ளார்க், காம்ப் க்ளார்க், காம்ப் ப்யூன், —இம்மாதிரியான ஸ்ரீ. நாயுடுவின் குடும்பத்தை என்ன செய்யப் போகிறீர்? இவைகளையும் ஒழித்து விட்டு, செலவைக் குறைத்து, சிக்கன முறையைத் தழுவி, வரும்படிகளை அதிகப்படுத்தி ஏதேனும் நல்லது செய்தால் உமக்கு மிகவும் சிரேயஸ் உண்டு. ஆபீஸ் சாவியைப் பத்திரமாக ஆபீஸ் பூட்டினவுடன் நேரே வீடு கொண்டு போய் குறிப்பாக ஓரே இடத்தில் தினந்தோறும் வைக்கவும். உமக்கோமறதி ஜாஸ்தியெனத் தெரிகிறது. 10-6-40 திங்களன்று காலை ஆபீஸிற்கு வந்து சாவி அகப்படாது தவித்து அன்று ஆபீஸ் பூட்டு உடைக்கப்பட்டதைப் பற்றி மனக்கவலை கொள்ளாதீர். இனி 'ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டால் கிறது!

—நலத்தை நாடுவோன்.

---

## பேஷ்காரின் பிதற்றல்.

பேஷ்கார், பரிதாபமான பேச்சுகளாகப் பலரிடம் பகர்வதாக நான் அறிந்தமாத்திரம் நானும் அவரிடம் அனுதாபத்தைக் காட்டுகிறேன். ஆனால் அவர் சிலசமயம் செய்யும் சண்டித்தனத்தைப் பார்த்தால் மிக ஆச்சர்யமாயிருக்கிறது.

14-6-40, வெள்ளியன்று பகல் சுமார் 12-30 மணிக்கு நான் ஒரு நண்பருடன் தேவஸ்தானக் கச்சேரி வழியாக வந்தபொழுது ஆபீஸ் நேரமில்லாத அச் சமயத்தில் பேஷ்காரும் மற்றும் என் கண்ணில் தென்பட்ட இரு குமாஸ்தாக்களும் (இது விஷயமாக ஆக்டிங் ஆபீஸர் விசாரிப்பதாக நான் அறிந்தால் அவ்விருவர்களுடைய பெயரையும் பின்னடி குறிப்பிடுகிறேன்.) ஆபீஸிற்குள் உட்கார்ந்துகொண்டு, இதில் முதல்வர் மேஜையின் மீது தன் இரண்டு கால்களையும் வைத்துக்கொண்டு "பேஷ்காரைப் பற்றி இனிமேல் அம்ருதலஹரியில் வந்தால் என்ன செய்வேன் தெரியுமா?"-இதுபோல் சில வார்த்தைகளை மிகவும் தைரியத்துடனும் ஊக்கத்துடனும் மீசையை முறுக்கிக்கொண்டு மிரட்டினார். அதில் எனக்கொருபயமுமில்லை. இதுவரை அம்ருதலஹரியில் வந்ததற்கு என்னென்னவோ செய்துவிட்டார்! இனி செய்வதற்கு! இதில் இப்போது கவனிக்கவேண்டியது யாதெனில்;—

பேஷ்கார் ஆபீஸ் எது? தேவஸ்தான ஆபீஸ் எது? ஆபீஸ் நேரமில்லாத சமயங்களில் குமாஸ்தாக்களுக்கு ஆபீஸில் என்ன வேலை? அதிலும் பேஷ்காருக்கு ஆபீஸ் நேரமில்லாத அச்சமயத்தில் தேவஸ்தான ஆபீஸில் என்ன வேலை? ஆபீஸில் உட்கார்ந்து வீண் பேச்சு பேசுவது சரியா? உட்கார்ந்த விதம் எப்படி? ஆபீஸ் கட்டிடத்திற்குள் உட்கார்ந்துகொண்டு இருக்கையில் பாதையில் போய் வருபவர்களிடம் என்ன வீண் காட்டுவாதம்?—என்பவைகளையெல்லாம் ஆக்டிங் ஆபீஸர் விசாரிப்பார் என நம்புவதாய் நமது நிருபர் அறிவிக்கின்றார்.

---

## இன்னும் இது வேணுமா?

கூடிய சீக்கிரத்தில் ஸ்ரீரங்கம் கோயிலுக்கு வேறு புது ஆபீஸர் வரப்போவதாக ஒரு வதந்தி வெளிக் கிளம்பி யிருக்கிறது. மானேஜர் வேலையோடு சேர்த்து ஆபீஸர் வேலையையும் மாதம் ரூபாய் எண்பது சம்பளத்துக்கே வேலை பார்க்கும் ஸ்ரீ. மாதவன் பிள்ளையே ஒழுங்காகக் காரியங்களைப் பார்த்து வந்தால் போதும். வேறு யாராவது புதிதாக வந்தாலும் அவருக்கு ராஜகோபால நாயுடு ப்ரீத்யர்த்தமாக மாதம் ரூ. 150+60 கொடுத்தது போல வேண்டியதே யில்லை, அலவன்ஸே வேண்டியதில்லை. சம்பளம் மட்டும் மாதம் ரூபாய் நூறு போதும். இப்படி வருகிற ஆபீஸரே மானேஜர் வேலையையும் பார்க்கவேண்டுமே யொழிய மறுபடியும் அந்த ஆபீஸருக்கு மானேஜராக மாதவன் பிள்ளையோ அல்லது வேறு யாரோ தனியாக நியமிக்க வேண்டாம். இரண்டு பதவிகளையும் ஒருவர் அலங்கரித்து வேலையைப் பார்த்து மனத்ருப்தி அடைந்தால் போதும். இதை போர்டார் கவனிப்பார்களா?

## ஜோடிகள் ஏலம்

தேவஸ்தானத்திற்குச் சுமார் இருபதினாயிரம் ரூபாய் வருமானம் வரக்கூடிய சில பாத்தியங்கள் ஏலம் விடப்படுவதுண்டு. கோர்ட்டு ஸ்கீம் பிரகாரம் இந்த ஏலம் ஆடி முதல்தேதியில் ஆரம்பமாகும் புதுப் பசலிக்காக வைகாசி மாதத்திலேயே நடக்கவேண்டியது. இப்போது போர்டார் பசலி வருஷத்தைத் தமிழ் மாதத்திலிருந்து கணக்கு வைத்துக்கொண்டு, அதற்கு இங்கிலீஷ்



தேதியை அடிக்கடி தேடவேண்டிய சிரமத்தை நீக்குவதற்காக பசலி வருஷத்தை ஜூலை முதல்தேதியிலிருந்து இங்கிலீஷ் மாதத்துக்குச் சரியாக மாற்றியிருக்கிறார்கள். ஆடி முதல் தேதியில் ஆரம்பமான பசலி இந்தக் கணக்கில் ஆனி 15-லயில் ஆரம்பமாகிறது. பஸலியை 15 நாள் முன்னதாக வைத்துக்கொண்டதற்கேற்ப ஏலத்தை சித்திரை 15-உக்குள் நடத்தியிருக்கவேண்டியது. சித்திரை மாத ஆரம்பத்தில் ஆபீஸர் பாடே ஏலமாயிருந்ததால் ஜோடிப் பாபத்துக்களை ஏலம் போடமுடியவில்லை. ஜூன் முதல் தேதி வரையில் இன்ன இடத்திலிருக்கிறார் என்று தெரியாமலிருந்த ஸ்ரீ. ராஜகோபால நாயுடு ஒருவாறாக தைரியப்படுத்திக்கொண்டு 29-ம் தேதி முடிய ராஜ்யம் ஆண்ட போதாவது ஏலம் நடத்தியிருக்கலாம்.

ரூ. 5300 குத்தகையுள்ள கொறட்டுமணியத்தைச் சென்ற வருஷம் ஸ்ரீ ராஜகோபாலநாயுடுவும், ஸ்ரீ. கொண்டப்பாவும், கிருஷ்ணயங்காருமாக மூவரும் சூழ்ச்சிசெய்துகொண்டு ஏலமில்லாமலே, முன் வருஷத்தில் சுமார் ரூ 1800 பாக்கியுள்ள அந்த கிருஷ்ணயங்காருக்கு—நாம் இவ்விஷபத்தை இப்படி வெளிப்படுத்தும் நாளது வரையில், அதாவது புது வருஷத்திற்காக ஏலம் போடும் நாளது வரையில் கொடுக்காமலேயே சாமர்த்தியமாக காலம் தள்ளும் கிருஷ்ணயங்காருக்கு—இனாமாகவே மணியம் பட்டம் சூட்டிவிட்டார்கள். இப்படி இனம் மானியம் விட்டதால் தேவஸ்தானத்திற்கு மட்டும் பணம் நஷ்டமாயிற்றே யன்றி கிருஷ்ணயங்காருக்கும் ஏலத்தொகைக்குச்சரியாக செலவு ஏற்பட்டதாக தெரிகிறது. இவ்வருஷமும் இப்படியே தேவஸ்தானத்திற்கு பாக்கியுள்ள ஸ்ரீ. கிருஷ்ணயங்கார் தனக்கு மணியம் கிடைக்கும் என்றெண்ணியிருந்தாராம். ஆனால் இவருடைய அத்ருஷ்டம் நாயுடுவுக்கு ராஜ்யமில்லையே!

புது ஆபீஸர் மாதவன்பிள்ளையும் ஸ்ரீ கிருஷ்ணயங்காரைக் கூப்பிட்டு ஏற்கனவே யிருக்கும் பாக்கி தொகையைக் கட்டினால்லது ஏலம் எடுக்கக்கூடாது என்று சொல்லிவிட்டதாகத் தெரிகிறது. 'இனமில்லாமல் பணம் கட்டி சம்பாதிப்பதற்கும் வழியில்லாமல் இப்பொழும் புது ஆபீஸர் நம்மைத் தொங்கலில் விட்டுவிட்டாரே' என்ற வருத்தம் கிருஷ்ணயங்காருக்கு இருக்கத்தான்

இருக்கும். ஆனால் பரம சாதுவான ஆக்டிங் ஆபீஸரை நாயுடு அந்தரங்கராயிருந்த அய்யங்காருக்கா ஏமாற்ற அகடவிகட சாமர்த்தியம் போதாது! இன்னொருவர் பெயரை வைத்து ஏலம் கேட்டுவிட்டு, பாக்கியை கட்டாமலே வேலையைப் பார்க்கமாட்டாரா?

## இவரது பிடிவாதம் என்னவாயிற்று?

பழைய ஆபீஸர் தான் பிடிவாதக்காரர் என்று நினைத்தோம். புது ஆபீஸரும் 'தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள்'. என்ற கொள்கையைக் கடை பிடித்தவரெனத் தெரிகிறது.

இந்த ஜோடிகள் வகையறு ஏலங்களை நாள் பார்த்து லக்னம் பார்த்து ஆரம்பிக்கிறது நெடுநாளைய வழக்கம். மகா கனம் பொருந்திய பேச்சில்லாதவராய் பேனு முனையில் அதிகாரத்தை வைத்திருக்கும் மேதாவி மாதவன் பிள்ளை அவர்களின் அரசாட்சியில் ஏலத்துக்கு நாள் வைத்திருக்கும் 15–6–40 சித்திரா நக்ஷத்திரத்துடன் கூடிய சனிக்கிழமை; மரணயோகமாய் நேர்ந்தது. மேலும் ஜோடி ஏலம் விட ஆரம்பித்த நேரம் மணி ஒன்பது. இராகு கால ஆரம்பமும் கூட. இவைகளை மனு மூலம் ஆபீஸர், அட்வைஸரி போர்டு சேர்மன், ட்ரஸ்டி, இவர்களுக்கு சிலர் தெரிவித்தார்களாம். 'எவ்வித காரணத்தையும் கொண்டு நிறுத்த முடியாது; இன்று தான் போடுவோம்' என்றாராம் புது ஆபீஸர் மாதவன் பிள்ளை. இச்சமயத்தில் ஏலம் போடுவதற்கு கூடஇருந்த இண்டெரிம் ட்ரஸ்டி ஒருவரும், அட்வைஸரி போர்டு மெம்பர் ஒருவரும் இருந்தும் இவ்விஷயத்தில் உபேக்ஷயாயிருந்தது மிக மிக விசனிக்கத் தக்கது. கடைசியில் என்னவாயிற்று?

தகுந்த போட்டியாளர்கள் இல்லாது காரணமாக அன்று அந்த ஏலம் ஒத்திவைக்கப்பட்டது. மனுதாரர்களிடம் காண்பித்த அரங்கனின் அன்பு போதும்!

---

கோயிலில் நடக்கும் ஊழல்களையும் பொது ஜனங்களின்
குறைகளையும் தேவஸ்தான ரக்ஷண ஸபைக்குத்
தெரிவியுங்கள்.

---

***Edited, Printed and Published by Pandit S. M. Sundararajacharya at the Sri Vilasam Press, Srirangam.***

